ഉ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூவனூர்ச்சிலேடைவெண்பா.



இஃது

திருக்கைலாயபரம்பரைத்

திருவாவடுதுறையாதீன வித்துவான்

**ஸ்ரீமத்-சுப்பிரமணியத்தம்பிரான்சுவாமிகள்**

திருவாய்மலர்ந்தருள,

சென்னை - அஷ்டாவதானம்

**பூவை - கலியாணசுந்தரமுதலியாரால்**

பார்வையிடப்பட்டு,

ஷை பூவனூர்த் திருப்பணிகைங்கரியம்

**இராசுமுதலியாரவர்கள்**

பொருளுதவியால்,

சென்னை

ஸ்ரீமட்டுவார்குழலாம்பாள் அச்சுக்கூடத்தில்

பதிப்பிக்கப்பட்டது.

ஏவிளம்பி௵ - துலாரவி.

# சாத்துகவிகள்.



ஸ்ரீமாணிக்கவாசகசுவாமிகளாதீனம்

சிதம்பரம் பாதபூஜை அம்பலத்தாடுஞ்சுவாமிகள்மடம்

## ஸ்ரீமத்-ஞானாநந்தசுவாமிகள்

அருளிச்செய்தது.

சேவலூ ருந்துசநற் செய்மழலைக் கேசெவிதந்
தாவலூ ரும்பெருமா ஞர்தருதன்-பூவனூரா
மீதுசி லேடைப்பா விளம்பினு ளெண்டுறைசைச்
சாதுசுப்ர மண்ணியநா தன்.

சென்னை-அஷ்டாவதானம்

## பூவை-கலியாணசுந்தரமுதலியாரவர்கள்

இயற்றியது.

திருக்கைலைபரம்பரையில் வருதுறைசையாதீனச் செந்தமிழ்ச்சீ, ரருக்கனெனவொளிர்தருசுப் பிரமணிய முனிவரன்று னக்தணுள, ரிருக்குரைநற் பூவனூர்ச்சி லேடைவெண்பா வெனுநூலொன்றியற்றிநாளும், வருக் கையாதியபழந்தேன் கண்டுசருக்கரையமுதின் மகிழ் வித்தானல்.

புவனூர்மிராசுதார்

## வெ-சபாபதிமுதலியாரவர்கள்

இயற்றியது.

கறைமிடற்றனை றிருக்கயிலைப்பரம்பரையில் வந்த-
காசினியி லாவடுதண்டுறையமர்ந்துமேலா, மறைவிளங்
குஞ்சைவநெறியோங்கிமிகவாழ் க-மணிநமச்சி வாயனெ
னுந் தேசிகன்றன்பால், பிறையாளவுமனத்தகலாவழியார்
கடம்பி-னின்பருள்சுப்பிரமணி யமுனிவனியற்றினனூல்:
நறைகமழும்புட்பவன நாதர்திரு வடிக்கீழ்-நன்மையுறு
வாழ்வுபெறச் சிலேடைவெண்பா தனையே.

திரிசிரபுரம் மகாவித்துவான்

மீனாட்சிசுந்தரம்பிள்ளையவர்கள் மாணாக்கர்

திருவானைக்கா

## சோமசுந்தரம்பிள்ளையவர்கள்

இயற்றியது.

தனதனுமனந்தனுந்தருகுருவெனும்பொனுந்தரு
சுரபியெழிலியென்னத்-தாவிலாச்செல்வமுங் கல்வியும
னத்திலுட் டகுநுட்பமதியீகையுங், கனதிபெறுமலையி
னும் வாக்கினுமனத்தினுங் கையிலுங்கொண்டவர்க்

குங-கருதுபலவுதவியும் புரியுநண்பனந்தர்கள் கலந்துவாழ்பூவனூரிற், தனதருள்பெரும்படிக் கருதிவருமெய்யடியர் தங்கணமலபந்தநூறித்-தாவிலாப்பெருவாழ்வு தந்தருளுமெம்பிரான குளிறமெருடுத்தணிந்தான், மனமதிலுணர்ந்துபல நபமருவுசிலேடைவெண் பாயாலேயொனறைஞான-மருவியொளிர துறைசைநகர் வந்தசுப்பிரமணியமா நவனுவந்துபாதோ.

---

விழுப்புரம்

## குழந்தைவேலுப்பிள்ளையவர்கள்

இயற்றிய

அறுசீர்க்கழிநெடிலாசிரியவிருத்தம்.

நறைசெய்பூந் துடவையார் திருப்பூவ னூர்பபதி
யை நண்ணி மேவுங், கறைசெய்கண் டத்தண்ணற்
கொருசிலே டைபா னுவல் கனிவாஞ்செஞ்சொ, லுறை
செய்கப் பனையலங் காரநவ ரசமனைத்து மொளிரச்
சொற்ருன், துறைசைச்சுப் பிரமணிய முனிவரனுஞ்
செந்தமிழிற் சுடர்போன் ருனே.

சாத்துகவிகள் முற்றிற்று.

---

# திருநாவுக்கரசுநாயனார்

## திருவாய்மலர்ந்தருளிய

## திருப்பூவனூர்-திருக்குறுந்தொகை.

### திருச்சிற்றம்பலம்.

பூவனூர்ப்புனிதன் றிருநாமந்தா
னாவினாறுநூறா யிரநண்ணினார்
பாவமாயினப் பாறிப்பறையவே
தேவர்கோவினுஞ் செல்வர்களாவரே. (௧)

என்னனென்மனை யெந்தையெனாருயிர்
தன்னன்றன்னடி யேன்றனமாகிய
பொன்னன்பூவனூர் மேவியபுண்ணிய
னின்னனென்றறிவொண் ணானியற்கையே. (௨)

குற்றங்கூடிக்குணம் பலகூடாதீர்
மற்றுந்தீவினை செய்தனமாய்க்கலாம்
புற்றராவினன் பூவனூரீசன்பேர்
கற்றுவாழ்த்துங் கழிவதன்முன்னமே. (௩)

ஆவின்மேவிய வைந்தமர்ந்தாடுவான்
றூவணீறு துதைந்தசெம்மேனியான்
மேவநூல்விரி வெண்ணியின்றென்கரைப்
பூவனூர்புகு வார்வினைபோகுமே. (௪)

புல்லமூர்தியூர் பூவனூர்பூம்புன
னல்லமூர்திகல் லூர்நனிபள்ளியூர்
தில்லையூர்திரு வாரூர்சீக்காலிநல்
வல்லமூரென வல்வினைமாயுமே. (௫)

அனுசயப்பட்டது விதுவென்னாதே
கனிமனத்தொடு கண்களுநீர்மல்கிப்
புனிதனைப்பூவனூ ரனைப்போற்றுவார்
மனிதரிற்றலை யானமனிதரே. (௬)

ஆதிநாத னமரர்களர்ச்சிதன்
வேதநாவன்வெற் பின்மடப்பாவையோர்
பாதியானன் பரந்தபெரும்படைப்
பூதநாதன்றென் பூவனூர்நாதனே. (௭)

பூவனூர்தண்புரம் பயம்பூம்பொழி
னாவலூர்நள்ளா றொடுநன்னிலங்
கோவலூர்குட வாயில்கொடுமுடி
மூவலூருமுக் கண்ணனூர்காண்மினே. (௮)

ஏவமேது மிலாவமணேதலர்
பாவகாரிகள் சொல்வலைப்பட்டுநான்

றேவதேவன் றிருநெறியாகிய
பூவனூர்புகுதப் பெற்றநாளின்றே. (௯)

நாரணன்னொடு நான்முகனிந்திரன்
வாரணன்குமரன் வணங்குங்கழற்
பூரணன்றனைப் பூவனூர்மேவிய
காரணன்னெனை யாளுடைக்காளையே. (௧0)

மைக்கடுத்தநி றத்தரக்கன்வரை
புக்கெடுத்தலும் பூவனூரன்னடி
மிக்கெடுத்த விரல்சிறிதூன்றலும்
பக்கடுத்தபின் பாடியுய்ந்தானன்றே. (௧௧)

திருச்சிற்றம்பலம்.

சுவாமி-புஷ்பவனநாதர்.

தேவி-கற்பகவல்லி.

---

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# பூவனூர்ச்சிலேடைவெண்பா.



பொன்னூரும்பூவனூர்ப் புண்ணியற்சிலேடைவெண்பா
வென்னூநரவா லியம்புவேன்-முன்னோன்
சதுரங்கமாடத் தனிக்கரியாஞ்சொக்கக்
கதிருலவைக்கைக் கரியைக்கண்டு.

நூல்.

மாதவந்தோர்கன்மனமு மாதரார்பூங்குழலும்
போதம்பொலியுஞ்சீர்ப் பூவனமே-சீதமுடைப்
பொற்கொன்றைத்தாரணிந்தார் போற்றிசெயுமன்புடைய
வெற்கொன்றைத்தந்தா ரிடம். (க)

பாமணிக்கள்பாடும்பசுங்காவுமன்னவரும்
பூமணத்தையேமேவும் பூவனமே-வாமத்
தலையோட்டிலேற்றூர்முன் றூருவனமாதர்
கலையோட்டிவித்தார்தங் காப்பு. (உ)

மின்னனையமெல்லியரு மேன்மையுடைப்பூசுரரும்
பொன்னனையேயொக்குமெழிற்பூவனமே-கன்னியொரு

பாகங்கலந்தார் பணிவார்தமக்கிரங்கிப்
போகங்கடந்தார் புரம். (ந)

கோங்குமுலையார்கரமுங் கோபுரஞ்சேர்கோடரமும்
பூங்கிளைகள்மேவுஞ்சீர்ப் பூவனமே-தாங்கரிய
சூலப்படையார்முன் ஞேத்திரஞ்செய்வார்க்கருளி
மாலப்படையார் மனை. (ச)

சிற்பரணிமதிலுந் திங்கிளவியார்கரமும்
பொற்கடகமூருமெழிற் பூவனமே-நற்பணிசெய்
தொண்டரையேயாள்வார் சூட்டுமணியரவைப்
பண்டரையேவீக்கினர் பற்று. (ரு)

மின்னார்மதிற்கிடங்கு மெல்லியலார்மென்றேளும்
பொன்னார்வளைசெறியும் பூவனமே-பன்னாளும்
போற்றுமடியார்க்கிரங்கிப் பொல்லாவெஞ்சஞ்சிதத்தை
மாற்றுமடியாரவர்தம் வாழ்வு. (சா)

ஞானமுடையோர்மடமும் நற்றரளவாவிகளும்
போனகம்பாலிக்குமெழிற் பூவனமே-மோனத்தாற்
கன்றுலின்கீழ்கின் றறமுரைத்தாரம்புயமின்
பொன்றுலிதந்தார் புரி. (எ)

யாவைப்பொருகண்ணார் வார்குழலுந்தேன்மொழியும்
பூவையையேயொக்குஞ்சீர்ப் பூவனமே-கோவைத்
திருவாசகமுரைத்தார் சேவடியைச்சேருதற்கங்
கொருவாசகமுரைத்தா ரூர். (அ)

திட்பமுடையோர்முகமுந் தெரிவையர்தநீள்விழியும்
புட்கரனேராகுஞ்சீர்ப் பூவனமே-கட்பனிப்பச்
சிந்திக்குமன்பர் திரங்கண்டவர்வினையைப்
பந்திக்குமையர் பதி. (சு)

நற்றாமரைத்தடமு நாரியர்தங்கைவளையும்
பொற்றாதுதிருஞ்சீர்ப் பூவனமே-பிற்கனக
மன்றமுடையார் மறையவர்மூவாயிரரி
லொன்றுநாமென்றூர்த வூர். (க0)

மேவுந்தனிமையினோர் மெல்லுரமுந்தண்முகிலும்
பூவந்திவீழுஞ்சீர்ப் பூவனமே-மேவுமணி
கண்டாவோடுன்வசமாக் காத்துத்தாவென்றளித்தார்
பண்டோர்காலாடெடுத்தார் பற்று. (கக)

நல்லார்விழிக்கடையு நல்லிளைஞர்திண்டோளும்
புல்லம்பொருவுஞ்சீர்ப் பூவனமே-யில்லாளை

வேட்டுன்பால்வந்தோமெய்த் தொண்டாதாவென்றுடனே
காட்டைக்கடத்தென்றார் காப்பு. (௧௨)

கன்னன்மொழியார்தனமுங் காமருபூவோடைகளும்
பொன்னாரம்பூணுமெழிற் பூவனமே-யெந்நாளுந்
தொண்டர்க்கமுதளித்த தூயபுகழ்மாரர்க்குப்
பண்டமுதமீந்தார் பதி. (௧௩

மன்னுகத்தண்காவு மங்கையர்தங்கொங்கைகளும்
புன்னுகமேவுஞ்சீர்ப் பூவனமே-முன்பகைவன
பத்தர்வேடத்தாற் பகைக்கவுயிர்சொன்றானை
மெத்துநரகந்தந்தார் வீடு. (௧௪)

தேருலவுவீதிகளுஞ் செவ்விளநீர்த்தெங்குகளும்
பூரணகும்பந்தாங்கும் பூவனமே-யாரூரன்
தொண்டக்கயலாகுந் தூயனொடுமென்றவிறல்
மிண்டர்க்கயலளித்தார் வீடு. (௧௫)

கற்புரிசைமேலிடத்துங் கனகமணியாடரங்கும்
பொற்கொடிநின்றாடுமெழிற் பூவனமே-நற்றுலையிற்
கோவணநேர்தாவென்றார் கோதிலமர்நீதியரை
பாவணமேகொண்டார்த மார்வு. (௧௬)

தொண்டரணிநுதலுந் தூயவெகினச்செறுவும்
புண்டரமேலோங்குஞ்சீர்ப் பூவனமே-பண்டங்
கெறிபத்தர்பூட்டியவா ளேர்வளவன்பற்றப்
பறிசடிலத்தோடெதிர்த்தார் பற்று. (கஎ)

நற்றவவேடத்தாரு நகையுடையகம்மியரும்
பொற்பணிகள்செய்யுமெழிற் பூவனமே-தற்பகைஞன்
வெண்ணீறுகண்டு விடாதபடையார்க்கருளுந்
தண்ணீர்சடைக்கரத்தார் சார்பு. (கஅ)

தாதகிசேர்வண்டுந் தனியரசர்வீதிகளும்
போதகமேசூழுஞ்சீர்ப் பூவனமே-காதலுடன்
திண்ணனூர்கண்ணழகத் தீவிரமாய்க்கைபிடித்துக
கண்ணப்பநில்லென்றார் காப்பு. (கக)

தண்டரளவாவிகளுந் தண்ணறுந்தண்டலையும்
புண்டரீகமேவுமெழிற் பூவனமே-வொண்கலையர்
குங்கிலியம்போடக் குலமனையிற்பாலடிசி
றங்கியுண்பாயென்றார் தலம். (உ0)

மேகமுறங்கும்மனையுமேதியுழும்பண்ணைகளும்
போகம்பொலியுஞ்சீர்ப் பூவனமே-காகமுடன்

## பூவனூர்ச்சிலேடைவெண்பா.

கஞ்சாரர்முன்போயிக் காரிகையார் தன்கூந்தற்
பஞ்சவடிக்காமென்றார் பற்று. (உக)

கட்டங்கயமின்னார் கையுநிலைக்தேரும்
புட்பங்களாருமெழிற் பூவனமே-கட்கங்கொண்
டுட்டியரிந்தார்க் குறுகமரின்யாவோசை
காட்டிக்கதியளித்தார் காப்பு. (உஉ)

பட்டுடையார்பூங்குழலும் பைங்காவும்வாவிகளும்
புட்பஞ்சாஞ்சேரும் பூவனமே-பெட்புடனே
யாறுயர்வேய்ங்குழலி லஞ்சக்கரமூத
வானுறுவந்தணைந்தார் வாழ்வு. (உங)

கன்னல்மொழியார்முகமுங் காசின்மணிமாளிகையும்
பொன்னிலமேயொக்குமெழிற் பூவனமே-முன்னாளிற்
சந்தனக்காப்புக்குத் தடையுற்றாருக்கருளிச்
சந்தனத்துக்காச்சென்றார் சார்பு. (உச)

நீதியுடையோரிலமு னீண்டசடையாருடலும்
பூதிமிகப்பொலியும் பூவனமே-கோதில்
முருகனார்தாந்தொடுத்த மூஈவரித்தார்கொள்
பருகமிர்தமானார்தம் பற்று. (உரு)

சிங்கவேறன்னார் செறிதனுவுமாரல்களும்
புங்கம்பொருந்துமெழிற் பூவனமே-சங்கலரும்
வாவிப்பசுபதியார் வாயுருத்திரஞ்செபிக்கத்
தாவில்பதமீந்தார்தலம். (௨௬)

யாழர்கவிரிதழு யாமணிநீர்வாவிகளு
போதிலவைகாடுஞ்சீர்ப் பூவனமே-காதலுடன்
நாளைப்போவேனென்றார் நற்சபையைச்சேருதற்குக்
கோளைத்தவிர்த்தார் குடி. (௨௭)

கோணாகவல்குலினார் கொங்கைகளும்வாவிகளும்
பூணாரம்பூணுமெழிற் பூவனமே-நாணாள்
கலையொலித்ததொண்டர்க்குக் கார்பொழிதல்கண்டு
தலைசிலையிற்றாங்கினார் சார்வு. (௨௮)

காரைப்புனைந்த கயமுங்களமர்களும்
போரைப்புரியுஞ்சீர்ப் பூவனமே-தாரைபோற்
பாலாட்டினார்க்கருளிப் பண்டுபுலிப்பாதர்க்குக்
காலாட்டிக்காட்டினார்தங் காப்பு. (௨௯)

விற்புருவவாணுதலார் மென்புயமுமேவகழும்
பொற்புனையதாகுமெழிற் பூவனமே-சொற்புனையுங்

# பூவனூர்ச்சிலேடைவெண்பா.

தாண்டகவேந்தர்க்குத் தனிப்புகலூர் தன்னிலையில்
மாண்டகதியீந்தார் மனை. (௩0)

சீதவனசம்முரலாற் சீர்முகமுநான்குறலாற்
போதனைநேராகுமெழிற் பூவனமே-கோதில்சீர்
மாறனுக்குமந்திரியாய் வன்சமணரைக்கழுவி
லேறவிட்டார்க்கின்ப ளித்தாரில். (௩௧)

நேமியுரக்கோடலா னீர்சங்கமேவுதலாற்
பூமிதேவிக்கிறையாம் பூவனமே-சாமியாம்
வன்றொண்டர்சாருமுனம் வானகயிலைசென்றார்க்குத
தன்றாளைத்தந்தார் தலம். (௩௨)

மின்னுடுமேகங்கள் மேவிச்சரியுறலாற்
பொன்னுடனைப்பொருவும் பூவனமே-நன்மலையிற்
றந்தாள்மேலாகத் தலைகீழாய்ச்சென்றாரை
யெந்தாயேயென்றா ரிடம். (௩௩)

தாரார்மதலை தரித்துலவைமேவுதலாற்
போரானைவத்திரனேர் பூவனமே-காராரு
மப்பூதிசெய்பணியை யப்பர்பதிகத்திலிடச்
செப்பூதியங்கொண்டார் சேர்வு. (௩௪)

வள்ளிக்கொடிபொருந்தி பாமுகமேபோராருளதாற்
புள்ளிமயில்மேவள்போலும் பூவனமே-வுள்ளன்பா
ஓதித்துமிய வொறுத்தார்க்குறுகொப்புள்
பாதியிற்பாரென்றார் பதி (௧௫)

சூலந்தரித்தலாற் றூய்மணிவாள்வீசுகையாற்
போலுஞ்சாமுண்டிகைநேர் பூவனமே-பாலில்லா
நாதனமிருந்தி நற்றீபமேற்றுதற்குச்
சீதநீர்வாரென்றார் சேர்வு. (௧௬)

தாதார்கமலமலர் தாங்குதலாற்றண்ணளியாற்
பூதரமங்கைக்கொப்பாம்பூவனமே-காதலியைப்
பிள்ளையார்பாலருந்தப் பேரன்பாலூட்டென்றார்
கள்ளார்குழிக்கையார் காப்பு. (௧௭)

தாங்குதருமத்தாற் றுணியங்களோங்குதலாற்
பூங்கமலைக்கொப்பாகும் பூவனமே-யாங்காரூர்
நம்பிகலிக்காமர் நற்சூலைதீரென்றார்
வம்புமுலையாள்பாகன் வாழ்வு. (௧௮)

சாரக்கலையுடைத்தாய்த் தண்கமலமேவுதலாற்
பூரவாகினினேராம் பூவனமே-சீரார்

திருமந்திரத்தைநீ செப்பென்றார்மூலர்க்குத்
திருமந்திரமைந்தார் சேர்வு. (௩௯)

திட்பமுடைக்கயத்தைச் சேருதலாற்செண்டுறலாற்
புட்கலைமணாளனைநேர் பூவனமே-கட்டிறவா
ராரூர்க்குளந்தொட்டார்க்கப்பொழுதேகண்கொடுத்தா
ரீரூர்க்கமலையார் சேர்வு. (௪௰)

பாத்துயர்பொன்மாடத்து பாவினருகுழுங்காவுட்
போத்துமிகப்பொலியும் பூவனமே-காத்திருந்து
மூங்குதினிற்றோற்ற லூர்க்கர்க்குபயிறகுதிற்
பொற்குவியலசேர்ப்பார் புரம். (௪௧)

சாந்தர்தருவேள்விகளுஞ் சார்ந்தாதந்தீவினையும்
போந்காவியாயொழியும் பூவனமே-வாய்ந்ததவச்
சோமாசியாறர்செயுந் தூயயாகத்தவிக்குத்
தாமாசியாச்சென்றார்சார்பு. (௪௨)

நண்ணுபெரியோர்மனமு நல்லுழவர்பன்மனையும்
புண்ணியமேமேலோங்குமெழிற்பூவனமே-யெண்ணியொரு
கல்லாலடித்தாற் கதியீந்துகாண்டவன்
வில்லாலடியேற்றார் வீடு. (௪௩)

நாய்கதையவீரர்களுங் காரிகைக்கோப்பானவரும்
போய்ப்புநையைநோக்குமெழிற் பூவனமே-தூய்மையுறு
ஞ்சாக்கரயாகம் பண்ணுஞ்சிறப்புலிக்குத்
தஞ்சார்புதந்தார் தலம். (௪௪)

அற்புடையசிங்கையரு பாளரசரய்புயமும
பொற்புயலைநாடுஞ்சீர்ப் பூவனமே-நற்குமரன்
டெருண்டர்க்கரியமுது தோகையுடனுக்கென்றூர்
பண்டுத்தாபதியார் பற்று. (௪௫)

பஙகமலநீபபாரும் பற்றலரைச்சாடுநரும்
புங்கவனைநோக்குஞ்சீர்ப் பூவனமே-யங்கண்
கயிலைக்காரூரர் கரிமுன்மாவோட்டுஞ்
சயிலனுலாக்கொண்டார்தஞ் சார்பு. (௪௬)

மன்வகைநூலாய்ந்தவரு மாமறைதேர்பூசுரரும்
பொன்புலவரொக்குஞ்சீர்ப் பூவனமே-நன்மருவார்
நந்தவனப்பணிசெய் நற்கணநாதர்க்குவகை
நந்தமுத்திதந்தார் நகர். (௪௭)

செங்களனிற்பற்றலருஞ் சேர்ந்தாரைப்பண்பினரும்
பொங்கப்புறந்தருசீர்ப் பூவனமே-யங்கருளாற்

கூற்றுவனூர் சூடுமுடி கோதில்மறையோர்மறைக்கக்
கூற்றுழல்தாள்வைத்தார் குடி. (சஅ)

மாதர்நடைவேட்டு மடவனமுங்கிள்ளைகளும்
பூதவமேசிற்குஞ்சீர்ப் பூவனமே-யோதரிய
பொய்யடிமையில்லாப் புலவர்தமிழேற்றார்
மெய்யடியாருக்கருள்வார் வீடு. (சகூ)

பாக்குபூ லும்வண்டினமும் பன்னிரையபேனிலையும்
பூக்கமிசையுஞ்சீர்ப் பூவனமே-தாக்குபா
வூரும்புகழ்ச்சோழ ரொண்டமுற்குண்டத்துவிழுப்
பாருவப்பச்சோறளித்தார் பற்று. (ருo)

ஆர்த்தார்விரவுதலா லாய்புண்டரீகத்தாற்
போர்ச்சென்னிக்கொப்பாகும் பூவனமே-கார்க்கொடைய
வண்பினரசிங்க ரடியார்க்குப்பொன்னளிப்பத்
தன்பதியையீந்தார் தலம். (ருக)

விற்கொடிகளோங்குதலால் வெண்டாளிமேவுதலாற்
பொற்கோதைக்கொப்பாகும் பூவனமே-நற்கனக
மீனென்றரற்காக வீரைநடுவிட்டாரை
வானென்றவைத்தார் மனை. (ருஉ)

வெற்றிக்கயலுறலால வேய்ஙிம்பமேவுதலாற்
பொற்றைக்கவுரியனேர் பூவனமே-யுற்றடியார்
தாள்கழுவநீரொழியாத் தையல்மலர்க்கரத்தை
வாள்வீசினுர்க்கருள்வார் வாழ்வு. (ருங)

சூலமுறலாற் சுணங்கன்புறமுறலாற்
போலும்வடுகனைநேர் பூவனமே-சீலக்
கலியர்விளக்கேற்றக் கழுந்நரியும்போதிற்
கலிதனையேநீக்கினுர் காப்பு. (ருச)

சூற்கையேந்திச் சரிகையிடைமேவுதலாற்
போர்நந்தியைப்போலும் பூவனமே-சீரடியார்
நாவிந்தைசொன்னுரை நாவரியுஞ்சத்தியரைக்
காணிந்தியாதாணடார் சார்பு. (ருரு)

முததமிழோர்கானமுளையு மூரல்விடாசுணமும்
புத்தகமேனுக்குஞ்சீர்ப் பூவனமே-சத்தநமன்
வீசுபாதத்தான்றளிகள் வெண்பாச்செயையடிகட்
காசுதீர்த்தாள்வா னகம். (ருசா)

வார்தடமாரோதிமமும் வாசமலர்ச்சோலையிலும்
போர்புளினமேவுமெழிற் பூவனமே-சார்தளியிற்

புலலோடுதென்சிகையும் பூரித்தெரித்தகணம்
புலவர்க்கருள்வார் புரம். (௫௭)

தேனுடுவண்டுந் தெரிவையரையாடவரும்
பூநாடிவீழுஞ்சீரா பூவனமே-கோனுடு
மூவேந்தர்பாற்கோவை முன்காரிமுற்றுவிக்கக்
காவேதண்டந்தந்தார் காப்பு. (௫௮)

அற்றூர்மனங்கவரு மலைவில்களுபாராமம்
புற்றுளிமேவுமெழிற பூவனமே-செற்றுறை
நெலவேலிவென்ற நெடுமாறன்பினுக்குச்
செலமுதவியீந்தார்தஞ் சேர்பு. (௫௯)

ஆரம்ணிவோருரமு பாயுமிழையாருங்கற்
பூரமணத்துனனுஞ்சீரா பூவனமே-சீரகத்து
ளாலயமதாக்கி யருள்ஞானபூசைசெய்து
சீலமுற்றூர்க்கருள்வார் சேர்வு. (௬0)

தேசுடையபங்கயமுஞ்சேர்மறையுநூலுளதாற்
பூசுரருக்கொப்பாகும் பூவனமே-காசுடைய
துன்னூர்முனைவென்று தொண்டர்பணிசெய்தவர்க்குத்
தன்னருளைத்தந்தார் தலம். (௬௧)

சீர்த்திகிரிமேவிச் செழுவாகைசூடுதலாற்
போர்த்தொழில்வேந்தாக்கொப்பாம் பூவனமே-தீர்த்த
னலர்யோத்தகோதைபணி காமீர்ந்தாக்குப்
பலர்சாணகதியளித்தார் பாறு. (௬௨)

நாயன்றியுநல னருமுலலைதாங்குதலாற்
போகமுறுநாப்கரைநேர் பூவனமே-வாகை
யிடங்கழியாரகேறசேனை யீசனடியார்க்கா
யிடிந்தகையாாக்கீவாரிடம். (௬௩)

தாவிலேர் தாங்குதலாற் றண்குவளைமேவுதலாற்
பூவசியருக்கொப்பாம் பூவனமே-மேவுசீர்த்
கணபூமுகந்த தனிபரசிழுக்கரியும்
பண்பூவினர்க்குவந்தார் பற்று. (௬௪)

மின்சடையார்மேவுதலால் மென்கமலமேந்துகையாற்
பொன்பருதிக்கொப்பாகும் பூவனமே-கன்னியொரு
பாகரபிடேகம் பண்ணும்புகழ்த்துணைக்குச்
சோகமறச்செய்தார் துறை. (௬௫)

நாரணனுகன்குறலா னற்றடத்துநீலுடைத்தாய்ப்
பூரணசசிக்கொப்பாம் பூவனமே-யாரணிந்தோன்

# பூவனூர்ச்சிலேடைவெண்பா.

நெற்சேரபகரித்த நீள்கடம்புகொன்றார்க்குப்
பொற்சார்புதந்தார் புரம். (௬௬)

ஆர்க்குமணியார்தனமு மன்பரவர்மெய்யும்
போர்க்கும்புளகமதாம் பூவணமே-சீர்குலவு
பத்தராய்த்தாழ்வார்முற் பத்தரெழுவோரையுமு
னத்தராயாண்டா ரகம். (௬௭)

தோட்டஞ்செய்மள்ளர்களுந் தொல்சக்கிரியாரும்
பூட்டைதனைச்செய்யுஞ்சீர்ப் பூவணமே-நாட்டமுறு
பூசலார்தாஞ்செய்த பொற்கோயிலுள்ளிருந்து
பாசவினைநீத்தார்தம் பற்று. (௬௮)

ஏம்பலுறுசோதிடரு மேர்சிறையமஞ்ஞைகளும்
பூம்புயலையேனோக்கும் பூவணமே-காம்பணிதோட்
பாண்டிமாதேவிபணி பத்தர்பதிகத்திலிடப்
பூண்டிருந்தாள்வார் புரம். (௬௯)

நந்தியடியார்தமையு நன்குணர்பாவாணரையும்
புந்திமகிழ்ந்தேத்துமெழிற் பூவணமே-சந்தித்த
தொண்டர்க்கணிகோவ ணந்தந்தநேசர்தொழப்
பண்டுபதமீந்தார் பதி. (௭0)

சாலுமயில்வீரர்களுஞ் சார்பிரமசாரிகளும்
போலும்புலவனையேர்ப் பூவனமே-நால்வாய்ப்
பந்தர்க்குச்சோழனைப் பாராளத்தந்திட்டார்
ந்தர்க்குத்தந்தையார் காப்பு. (௭௧)

ஆசிலிழையார்குரவை யார்ப்புமணிமதிலும்
பூசந்தடவியெழும் பூவனமே-நேசமொடும்
பாணனார்யாழ்மீட்டப் பார்த்துருகியேற்றரவப்
பூணனாராண்டார் புரம். (௭௨)

காவலுடைமன்னவருங் காரிகையார்மார்பகமும்
பூவலயந்தாங்குஞ்சீர்ப் பூவனமே-நாவற்
சடையரிசைஞானி தநயரிவரை
யடைவினாலாண்டா ரகம். (௭௩)

நன்னுதலார்தங்கரமு நாரமலர்ச்சோலையிலும்
பொன்வண்டுசேருமெழிற் பூவனமே-மன்னன்
கருங்குட்டந்தீர்க்குமொரு காமருதெண்ணீரா
ரொருங்கட்டமும்மதிலா ரூர். (௭௪)

தொல்லறவர்வேள்வியிலுஞ் சூழ்காவிற்பஞ்சரத்தும்
புல்லப்புலிங்கமுறும் பூவனமே-சொல்பலியை

யந்தணரிலேற்று ரருமறைநாலவர்ககருளிப
பந்தமதைதீப்பார பதி. (எரு)

அக்கமுரத்தோர்பிறப்பு மன்புடையாராள்தனமும்
பொக்கமேபோலுஞ்சீப பூவனமே-சக்கரமுன்
சேவடியிற்கண்சாத்துஞ் செலவர்க்கருள்கச்சி
மாவடியிற்சேர்வார் மனே. (எசு)

வாரிற்படுமுலையார் வெண்சிலைபபுயாறுரும
போரிற்புலம்புஞ்சீர்ப பூவனமே-நீருடைய
வம்பவளச்சடையா ராரூர்யாசடையார்
செம்பதுமத்தாளாரதஞ் சோவு. (எஎ)

செலவமுளோரிலலத்துஞ் சேர்புதவுஞ்சோவிடத்துப
புல்லிப்பொறியுளதாம் பூவனமே-பலலலசெயும
வன்சமணர்விட்ட மதகரியைக்கொனறழித்தா
ருன்னுமனத்துறைவா ரூர். (எஅ)

காரிகையாரில்லத்துங் கனகமணியாலயத்தும்
பூரிகையதாருமெழிற் பூவனமே-யாரியனுப்
வேதப்பொருளுரைத்தார் மெய்யடியார்நால்வர்க்குப்
போதப்பொருளார் புரம். (எகூ)

காவிற்கழையுறலாற் கண்ணிலமேவுதலாற்
பூவம்பனுக்கொப்பாம் பூவனமே-காமனைமுன்
னெற்றிவிழியாலெரித்தார் நேரார்புரமூன்றும்
பற்றுநகையாலெரித்தார் பற்று. (௮0)

செயநிதியுடையார் சீர்க்குணமுந்தேவியரும்
பூமகளுக்கொப்பாகும் பூவனமே-மேவுமுக
பூசிங்கநேரித்தார் பொற்பணியாம்பூணணிந்தார்
நாசிக்குத்தாதுற்றார் சாபு. (௮௧)

தாம்புடையநலலாவுஞ் சார்மறைதேரந்தணரும்
பூம்புகரைமேவுஞ்சீர்ப் பூவனமே-யெம்பலொடுங்
கற்பகவல்லித்தாயைக் காமருபாகத்துடையார்
கற்பகையதில்லார் தலம். (௮௨)

அங்கைப்படையினரு பாயிழையார்நற்றனமும்
பொங்கிப்புடைத்தலுறும் பூவனமே-செங்கணுடை
பூதப்படையார்செம பொன்மன்றிடைநடஞ்செய்
சீதச்சடையார்தஞ் சேர்வு. (௮௩)

பள்ளிதனிற்பிள்ளைகளும் பண்புடையசோதிடரும்
புள்ளிதனைநோக்குமெழிற் பூவனமே-துள்ளுபரிச்

## உஅ பூவனூர்ச்சிலேடைவெண்பா.

சேரன்புதல்வியையுஞ் செம்பாதியிற்கொண்டா
ரூரர்க்குத்தோழ னூரூர். (அ௪)

தாதிற்பொலிகுழலார் தம்பணியும்வீதிகளும்
போதிற்புனைதலுறும் பூவனமே-காதுவலி
யேறேறுஞ்செலவ ரெழின்மாறன்கைபயிரம்பி
னூருருயிர்க்களித்தா ரூர். (அ௫)

சீதம்படர்வயலுஞ் செய்யோர்தமதகமும்
போதம்பொதுளுஞ்சீர்ப் பூவனமே-வாதவையில
மாமனுவந்து வழக்குரைத்தாமாமேருச்
சேமநாண்வில்லார்தஞ் சேர்வு. (அ௬)

மின்னனூருடலிலு மென்கரும்பார்தண்வயலும்
பொன்னூருஞ்சிந்துஞ்சீர்ப் பூவனமே-முன்னனி
லத்திமலராக்கு மாறுடையாரன்றெழுந்த
வத்திவுரிபோர்த்தா ரகம். (அ௭)

தோகைமடவார்களனுந் தொல்பழனவார்குலையும்
பூகம்பொலிவளமார் பூவனமே-வாகைபெறுங்
கேழல்மருப்பணிந்தார் கேழ்கிளருகற்பனச
நீழல்விருப்பார் நிலை. (அ௮)

சிங்காரக்கொங்கையார் செவ்விதழுஞ்சேரிலமும்
பொங்கர்தனைப்பொருவும் பூவனமே-கங்கையுடைச்
செஞ்சடையாரங்கைதனிற் சேர்துடியார்கண்டத்து
நஞ்சுடையாரானூ நகர். (அகூ)

அங்காடிவீதியிலு மான்றவன்மீகத்தினிலும்
பொங்கரமேவுஞ்சீர்ப் பூவனமே-தங்கரத்திற்
றூவுமானேந்தினார் தக்கன்சிரந்தடிந்தத்
தேவினஞ்சாடினார் சேர்வு. (கூ0)

பட்டுடையார்கண்டத்தும் பாதிமதிநுதலும்
பொட்டுமிகப்பொலியும் பூவனமே-யெட்டுடைய
நற்குணத்தர்சிற்பரனா நாரியொருபாலுடையார்
பற்குணன்வில்லேற்றார் பதி. (கூக)

மாக்கமலையன்னார்பால் மைந்தர்களுமானிரையும்
பூக்குழலுறுஞ்சீர்ப் பூவனமே-தூக்கரிய
மாறேற்றவுத்தமனார் மாறனைய்மண்ணூண்டா
ராரேற்றநீள்சடையா ரார்வு. (கூஉ)

ஆற்றற்புரவலரு மந்திருவுமீகையரும்
போற்றப்புரக்குமெழிற் பூவனமே-சாற்றுமொரு

## பூவனூர்ச்சிலேடைவெண்பா.

மானைத்தரித்தார் மழுவைக்கரங்கொண்டா
ரானைக்கொடியா ரகம். (௬௩)

சிற்பரணிமேனிலமுஞ் செங்கயலவாவிகளும்
பொற்புரியளாவுஞ்சீர்ப் பூவனமே-முற்கரியைப்
போர்க்குபாகர்தர் புரத்திலுளவர்தமைக்
காக்குமாகத்தார்தங் காப்பு. (௬௪)

மாக்குழலார்கட்கடையு மாதவருந்தாமரையும்
பூக்கும்புலத்தலைமையர்ப பூவனமே-தூக்கிய
சக்கரத்தான்மாய்த்துச் சலந்தரனைவானவர்முன
புக்கருளிச்செய்தார் புரம். (௬௫)

மல்லன்மலர்க்காக்கவடு மங்கையர்கடந்தனமும்
புல்லும்புலியையெழிற் பூவனமே-நல்லமுத
மென்மொழியாள்பாகரொரு மேருவரையில்லாகத்
தன்வலியாற்செய்வார் தலம். (௬௬)

காரிக்கொப்பானவரும் கைவீணைபாடுநரும்
பூரிதனைச்செய்யுஞ்சீர்ப் பூவனமே-தாருவன
மின்னார்கடையேற்றார் மென்கலையும்பொன்வளையுந்
தன்கடிதைதயேற்றார் தலம். (௬௭)

மேழியுழுமள்ளர்களு மென்சலமும்பண்ணையினிற்
பூழியுறவாக்குமெழிற் பூவனமே-வீழிதனிற்
சம்பந்தரப்பருக்குச் சாமத்திற்பொன்னளித்தா
ரெம்பந்தந் தீர்த்தாரிடம். (௯௮)

தீதகலுஞ்சிந்தையருஞ் செல்வர்கள்தந்தேவியரும
போதகப்பொருள்விழையும் பூவனமே-காதுவிட
கண்டக் கறைபடைத்தார் கர்த்தர்கரிமுகற்குப்
பண்டளித்தார்வாழும் பதி. (௯௯)

ஆற்றலுடைப்புலவ ரன்பருங்காராளர்களும்
போற்றுநவீனச்செய்யுமெழிற் பூவனமே-யேற்றுடைய
புட்பவனநாதர்திருப் பூங்கமலச்சேவடியென்
னுட்பதியவைத்தார் தமூர். (௧00)

வாழி.

வாழிதிருப்பூவனூர் வாழிசதுரங்கவல்லர்
வாழிகற்பவல்லியெந்தாய் மாமறையோர்-வாழியவே
வெண்ணீறுங்கண்டிகையு மெய்யடியாரும்வாழி
புண்ணியரும்வாழி புரிந்து.

பூவனூர்ச்சிலேடைவெண்பா
முற்றிற்று.

தற்சிறப்புப்பாயிரம்.

சீராரும்பூவனூர்ச் செல்வற்சிலேடைவெண்பாப்
பாராருமேத்தப் பணித்திட்டான்-காரார்
மதிற்றுறைசைச்சுப்ரம்ணிய மாமுனிவன்றொல்லைப்
பதிகம்ச்சிவாயற் பணிந்து.



# பிழைதிருத்தம்.

| பாட்டு. | வரி. | பிழை. | திருத்தம். |
| --- | --- | --- | --- |
| 4 | 2 | மலை | மனை |
| 1 | 3 | யினப் | யின |
| 13 | 3 | மாரர்க்கு | மாறர்க்கு |
| 15 | 3 | தொண்டக்ங்கய | தொண்டர்க்கய |
| 19 | 3 | கண்ணழகத் | கண்ணசழத |
| 21 | 3 | கஞசாரா | கஞ்சாறர் |
| 22 | 2 | புட்பஙக | புட்பகஙக |
| 30 | 2 | புனை | புணை |
| 32 | 1 | நேமியுர | நேமியுற |
| 63 | 3 | கழியார | கழியார் |
| ௸ | 4 | யார | யார் |
| 65 | 2 | பருதி | பரிதி |
| [illegible] | 1 | சேர் | சோ |
| [illegible] | 3 | பர | புர |
| [illegible] | 3 | செம | செம் |
| [illegible] | 4 | பற்குனை | பற்குனன் |